உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## ஆன்மார்ப்பணத் துதி

# நூல் வரலாறு

" பித்தொடு மயங்கியோர் பிணிவரினும்
அத்தாவுன் னடியலா லரற்றுதென்னுப்
புத்தருஞ் சமணரும் புறனுரைக்கப்
பத்தர்கட் கருள்செய்து பயின்றவனே
இதுவோ வெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோ வுனதின்னரு ளாவடு துறையரனே "

(திருஞானசம்பந்த நாயனுர்.)

என அருளிச் செய்தார் ஞானசம்பந்தப் பெருமானுர். பித்தொடு மயங்கியபோதும் பிறைசூடிய பித்தனை மற வாத பீடுடைப் பெருந்தகையோரே பெரியோர் என்ற பெயருக்கு உரியோர் ஆவர். அத்தகையவர்களில் ஒருவர் ஸ்ரீமத் அப்பைய தீட்சிதேந்திரர்.

அப்பைய தீட்சிதர் கி. பி. 16ஆம் நூற்ருண்டின் பிற் பகுதியில் தமிழ்நாட்டில் காஞ்சீபுரம், திருவான்மியூர், சிதம்பரம், வேலூர் முதலிய தலங்களில் வாழ்ந்தவர்.

வேதாகம புராணேதிகாசங்கள் இலக்கணம் முதலிய சாத்திரங்கள் எல்லாம் கற்றுவல்ல பெரிய பண்டித சிரோமணி. நூற்றுநான்கு நூல்கள் இயற்றிய மேதை. கவிச்சக்கரவர்த்தி. நூலாசிரியர், உரையாசிரியர் முதலிய ஆசிரியத் தன்மை நிறைந்தவர். எல்லாவற்றினும் மேலாக பரமசிவ பக்த சிகாமணி.

பிற சமயத்தார் சைவத்திற்குத் தீங்கு இழைக்கத் தொடங்கும் அவ்வப்போது, தம் வாக்கு வல்லபத்தால், அவர்களை வென்று சைவமெனும் பயிர் வளர்த்த வைதிக சைவக் காவலர்.

"அஞ்சுவது யாதொன்றுமில்லை; அஞ்ச வருவது மில்லை" என்ற ஞான வீரர்களில் ஒருவராகிய அவருக்கும் ஓரச்சம் தோன்றிற்று. என்னை?

*" நனவிலும் கனவிலும் நம்பா உன்னை*
*மனவினும் வழிபடல் மறவேன் அம்மான் "*

என்று ஆளுடைய பிள்ளையார் அருளிச் செய்தபடி இரு நிலைகளிலும் சிவசிந்தனை நமக்கு நீங்காமல் இருக்கின்றது. எனினும் சாகுங் காலத்தில், உள்ளனவாகும் வேதனை களால் அறிவு அலமரலுறுமே! அப்போதும் என் சிந்தை யாகிய வண்டு, சிவனடித் தியானத்தேனில் திளைக்குமோ? நோய் கவலை கலக்கம் முதலியவற்றில் பட்டு இளைக்குமோ? என்பதுதான் அவர் கொண்ட ஐயம். அவ்வையத்தைத் தீர்த்துக்கொள்ள ஓர் உபாயங் கருதினார்.

நம்பிக்கையுள்ள மாணவர்களிடம், 'நான் ஊமத்தங் காயைத் தின்பேன். அதனால் என் அறிவு கலங்கிப் பித்துறுவேன். அது தெளியும்வரை யான் செய்யும் செயல்களைக் குறித்துக் கொள்வதோடு, யான் பிதற்றுவன வற்றையும் எழுதி வைமின்' என்று பணித்தபின் ஊமத்தங்காயைத் தின்றார். பித்தும் பிடித்தது. பிதற்ற லும் தொடங்கியது. அப்பிதற்றலில் வெளிப்பட்டவையே ஆன்மார்ப்பணத் துதிச் சுலோகங்கள் ஐம்பதும். இக் காரணத்தால் இந்நூலுக்கு 'உன்மத்த பஞ்சாசத்' எனவும் 'உன்மத்தப் பிரலாபம்' எனவும் வேறு பெயர்களும் உள.

மாற்று மருந்தால் பித்தம் மாறித் தெளிந்தபின், தம் மாணவர்கள் காட்டிய சுலோகங்களைக் கண்ட பின்னர், தீட்சிதர், தாம் கொண்டிருந்த ஐயம் அகலப் பெற்றார்.

"உண்டியிற் பட்டினி நோயில் உறக்கத்தில்—ஐவர் கொண்டியில்" பட்டபோதும், சாம் அன்றும் சங்கரனை நம் மனம் மறவாது எனத் தைரியம் கொண்டார்.

இனி, இந்நூலின்கண் அமைந்த சில அரிய கருத்துக் களைக் காண்போம். தீட்சிதர் அருளிய ஆன்மார்ப்பணத் துதிச் சுலோகங்கள், "அன்பினால் ஆவியோடியாக்கை ஆனந்தமாய்க் கசிந்து உருகி"ப் பாடியவை. உடலவிழ உயிரவிழ உணர்வழிய உளமவிழ உண்மைப் பொருளை உணர்ந்து பாடியவை. பரமசிவ பக்தர் உள்ளந் தித்திக் கும் அன்புச்சுவை ததும்பியவை :

*முதற் பாட்டில்—அதிவிசித்திர உலகத்தைப் படைத்த—அளவில்லாத—ஆற்றலுடைய இறைவன் புகழ் யாராலும் சொல்லற்கு அரியது. ஆனால் அதனைச் சொல்லத் துணிவும் ஆற்றலும் மெய்யன்புடையவர்க்கு மேவும்.*

*3ஆம் பாட்டு—வேதநான்கினும் மெய்ப்பொருள் ஆவது பரமசிவமே. ஏனைய தேவர் அவனால் ஆக்கப்பட்டவரே.*

*6ஆம் பாட்டு—தியானம் பூசை வருணாசாரம் முதலிய எல்லாவகையாலும் பெரியோர்கள் சிவனையே மகிழ்விக் கின்றனர்.*

*8ஆம் பாட்டு—இறைவனை வழிபடல் எளிது.*

*10ஆம் பாட்டு—சிவனைச் சரண்புகுவதே பிறப்பறுக்கச் சிறந்த வழி.*

*14ஆம் பாட்டு—அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தல்.*

*15ஆம் பாட்டு—ஆன்மார்ப்பணம் செய்தல்.*

*16ஆம் பாட்டு—சிவனே சகல கலைகளுக்கும் முதற் கருத்தன்.*

*20ஆம் பாட்டு—எல்லாம் அறிந்த இறைவன், அடியார் சொல்லி அறியவேண்டியவன் அல்லன். எனினும் தோத்திரம் அவனது கருணை கைகூடச் செய்யும்.*

22ஆம் பாட்டு—சரணுகதி அடைந்தோர் மனத்தளர்வுருர்.

31ஆம் பாட்டு—ஆட்கொள்ளும்படி விண்ணப்பிக்கும் விதத்தின் அழகு.

42, 43, 44ஆம் பாட்டுக்கள்—நிந்தாத் துதிகள்.

48ஆம் பாட்டு—மன்னிப்பு விண்ணப்பிக்கும் அழகிய முறை.

49ஆம் பாட்டு—முடிபான வேண்டுகோள்.

அரிய இந்நூலினே, வடமொழி அறியாத தமிழ்ப்பெரு மக்களும் ஒருவாறு அறிந்து மகிழ்ந்து, புண்ணியமும் சிவ பக்தியும் பெறவேண்டும் என விரும்பி, என் அறிவு ஆற்றலுக்கு இயைந்த அளவில் மொழிபெயர்த்துள்ளேன்.

இச்சிறு பணியைச் சைவத்திற்கும் தமிழுக்கும் செய்த ஒரு சிறு தொண்டாகக் கருதித் தமிழ் உலகம் ஏற்றருளி என்னே ஊக்குமாறு பணிவுடன் வேண்டிக் கொள்கின்றேன்.

84, காந்திபுரம்,
நான்காவது தெரு,
கோயம்புத்தூர்,
30—1—66.

கு. நடேச கவுண்டர்.



தவத்திரு. சம்பந்த சரணாலயத் தம்பிரான் சுவாமிகள்

சிவக்கவிமணி C. K. சுப்பிரமணிய முதலியார்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிறப்புப் பாயிரம்

தாராபுரம் - வித்துவான் உயர்திரு. தா. ந. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் இயற்றியது

எழுசீர்க் கழிநெடி லடியாசிரிய விருத்தம்

மதிதவழ் சடையெம் பரம்பர னடியே
மனமருள் உற்றவஞ் ஞான்றுந்
துதிசெய வலதோ வெமதுநா வன்றித்
தோமுறு சொல்லெலாஞ் சொலுமோ
அதுவறி குதுமென் றெண்ணியூ மத்த
மயின்றதன் பின்வட மொழியில்
விதிதரு மான்ம சமர்ப்பணத் துதிநூல்
விளம்பின ரப்பதீக் கிதரே. (1)

மத்தமே யணிந்து பித்தனு யலைந்த
மாதொரு பாகனே மத்தஞ்
சுத்தநல் லுண வி னருந்தியுஞ் சித்தந்
தூயதா நிலையிலே யிருப்ப
உத்தம மான வித்துதி நூலை
யுரைத்தருண் மறையவர் முனியோ
வித்தகப் புலவீர் யாவரே சிறந்தார்
மெய்ம்மையே புகலுமின் முறையே. (2)

விம்மியே யழுது நீலிபா லுண்ட
வியன் கொச்சை வாய்ப்பிள்ளை சொல்லே
செம்மையா வதுவென் றெண்ணிநெக்
குருகித் தினந்தினம் வழுத்திடுந் திறத்தோன்
இம்முத னூலின் பொருளெலா
நிறைய வதனினு மின்சுவை ததும்ப
அம்மவோ தமிழின் மொழிபெயர்த்
தீந்த வதிசய மதனினும் பெரிதால். (3)

இன்னவன் யாவ னெனிற்கொங்கு நாட்டில்
இசையெலாங் கொள்ளேகொள் கோவை
மன்னுவே ளாளர் மரபிலே வந்து
வண்டமிழ்க் கடற்கரை கண்டு
கன்னலி னமுதின் மாணவர் சுவைப்பக்
கலைதருங் குரவனு வமர்ந்தான்
என்னுடை நண்பன் கவியர சானு
னிலங்குறு நடேசப்பே ரினனே. (4)

———

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## மொழிபெயர்த்த ஆசிரியன் கூறிய

# அவையடக்கம்

ஞான வாணி நடங்குலவு
நளின மலர்வாய் பொழிநறவை
ஈன மதியேன் பெயர்த்திசைத்த
தெவ்வா றிசையும்? நறுந்தேனில்
தானும் படிந்தே சிற்றீநுண்
தளிசொண் டாக்கும் இருல்நறவை
ஆனைந் தாடும் பெருமானும்
அமர்ந்தங் காடும் அருளாலே.

———

முதனூலாசிரியர் வணக்கம்.

கைப்பையன் ஈன்றுளேக் கமுமவணைத் துளங்களித்தே
எப்பையு ளெனுமின்றி இனியசொலிக் கொஞ்சுதல்போல்
ஒப்பையரிலை என்ற ஒருசிவனே உவந்தேத்தும்
அப்பைய தீட்சிதன்றுள் அரவிந்த முடிக்கணிவாம்.

———

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீமத் அப்பைய தீக்ஷிதேந்திரர்

அருளிச்செய்த

# ஆத்மார்ப்பண ஸ்துதி

மொழிபெயர்ப்பு



தேவ தேவபஃ றிறப்படு படைப்பிது
செனித்ததிங் கெவன் பானின்
ருவை நீயவ னேயெனி லுனதுமே
லாம் புகழ் தனையம்ம!
ஏவர் தேர்குவ ரெனினுமன் பெனும்பிடிக்
கெய்துவை யெனத்தேறித்
தாவி லன்பையே துணைகொடு துதிக்குமென்
சாகசம் பொறுப்பாயே. (1)

அன்புதுணை யுளதென் றரிய தாகிய
உன்புக ழுரைக்க லுற்றே னென்றது.

[பல் திறப்படு படைப்பு=பல வகையான வேலைப்பாடு கள் அமைந்த படைப்பு. பலதிறப்பாடு அமைந்த இவ்வுலகம் எவனிடமிருந்து தோன்றிற்றோ அவன் நீயே ஆகுவை என்க. தாஇல் அன்பு=கெடுதல் இல்லா அன்பு. சாகசம்=உள்ளத் துணிவு.]

நிலமு மற்றவு மவயவப் பகுப்புள;
நிச்சயம் படைப்பேதான்;
இலகு மப்படைப் பியற்றுவோ னுடனுபா
தானந்தா னிலையானுல்
நிலவு மோசட நிமித்தம தாகுமோ ?
நிறுவுமோ திறனில்லாது
அலைப டும்உயிர் ? அகிலமுன் படைப்பென
ஐய, நான் அறிந்தேனே. (2)

பேரறிவாள னின்றி யிவ்வுலகம்
சீராயமையுந் திறன் இன்றென்றது.

[இயற்றுவோன்=கர்த்தா. உபாதானம்=முதற் கருவி, குடத்துக்கு மண்போல. உயிர் உலகத்தை நிறுவுமோ? என்க. அகிலம்=அனைத்தும்.]

மாயையின் வலியான் மயங்கினோர் இந்த்ரன்
மித்திரன் வருணன்வா யுமலர்
ஆயவன் விண்டு தம்மையும் ஈசன்
ஆகிய உன்னையும் எண்ணி
வாயினுல் உரைப்பர், அவரையும் அனைத்தும்
வகுத்ததுன் சத்தியிற் சிறிதே,
தூயவன் சம்பு ஆதிதே வென்று
சொலுமறை நினைப்பர சிவமே. (3)

ஏனைத் தேவரொ டிறைவனை வைத்தெணல்
மாயையின் வலியான் மயங்கினர் செயலெனல்.

[மலர் ஆயவன்=தாமரையில் தோன்றிய பிரமன். ஈசன்=ஐந்தொழிலும் இயற்றும் முழுமுதல் தலைவன். உன் சத்தியின சிறு கூறே இந்திரன் முதலானவர்களைப் படைத்தது என்க சிவபெருமானையே வேதங்கள் 'சம்பு' எனவும், 'ஆதி தேவன்' எனவும் கூறும்.]

இன்ன படித்தென் றுணரவொண்ணு
இன்பக் கடலே திரண்டுருவாய்
மன்னு முமை யாம் சத்தியொடு
மருவி அழியா இன்பார்ந்து
துன்னு மிரவி கோடியொளி
துலங்கி அத்வா தீதத்தாம்
முன்னைப் பதியிற் கணம் பரவி
மொய்ப்பச் சடையாய் விளங்குதியே. (4)

சத்தியாங் தையல் தன்னெடின் புருவாய்
அத்துவா தீதத் தமர்ந்தனை யென்றது.

[இன்பத்திரளே இறைவன் உருவம்; சத்தியே உமையாள் உருவம். அத்துவாக்களுக்கு அப்பாலுள்ளது அவன் அமர் உலகம்.]

யாவும்அசை விக்கும்உப காரிமறை முடிகள்உனை
அளவில்பல மகிமையுடைய
தேவென இசைப்பமறை யோர்முதலி யோர்வரத
செந்நெறிசெல் தொண்டுபுரிவார்
பூவுலக வாழ்வமரர் வாழ்வுமதி யாதசிவ
யோகியர் பொருந்திருண் மலம்
ஓவுற மனக்கமல மீதிடை விடாதுநினை
உள்குவர் உயர்ந்த பொருளே. (5)

மறையின் முடிவு மறையவர்குழுவும்
துறவிய ருங்தொழும் சோதிநீ யேயெனல்.

["அவனன்றி ஓரணுவும் அசையாது". 'தன்மை பிறரால் அறியாத தலைவன்' அவன். அவனை நம்பியே அந்தணர் முதலியோர் தத்தம் அறங்களை இயற்றுகின்றனர். இம்மை மறுமை இன்பங்களை மதியாத யோகிகள் தம் மனக கமல மலரிடை அவனையே வைத்துத் தியானிக்கின்றனர்.]

உருகெழு பவக்கடல் கடப்பர்மிக எளிதில்உனை
உளமலரில் உள்குசிலரே;
திருமலரை ஒத்தநின பதயுகம் வழுத்திஒரு
சிலர் கதியை உற்றனர், சிலர்,
வருணநெறி நின்றுனது மொழிவழி நடந்துபவ
வாரிதி கடந்தனர்; சிவ!
வெருவரு பவக்கடலின் முழுகினன், இவற்றுள்ஒரு
விதமும்முய லாவிழலனே. (6)

தியானம் பூசை செகத்தற நெறிச்செலல்
யாதும் இலாதேன் எங்ஙன்உய் வேனெனல்.

[உருகெழு பவக்கடல்=அச்சம் மிகுந்த பிறவிக் கடல். பதயுகம்=இரண்டு திருவடிகள். பவ வாரிதி=பிறவிக்கடல். வெருவரு=அச்சத்தைத் தரும். விழலன்=பயனற்ற ஒரு வகைப் புல் விழல் எனப்படும். அது போன்றவன் விழலன்.]

வழிவழி யடியர் மரபினில் வினையேன்
வந்தனன். மதனனை வென்றோய்!
ஒழிவறு நினது கருணையா ரமுத
உததியின் திவலையும் சுவைத்தேன்.
அழிதகை யேன்இந் திரியவாஞ் சையினல்
அவத்தமே அலைந்தனன். அந்தோ
தொழஉன தடிகள் சிந்தைசெல் லாமல்
தொலைத்தனன் தொல்குடிப் பிறப்பே (7)

புலப்பகை அலைப்பக் குலத்தியல் பயர்த்தேன்
நினதருள் நினையேன் எனக்கவன் றுரைத்தது.

[இம்முதனூல் ஆசிரியராகிய அப்பைய தீக்ஷிதருடைய முன்னேரும் (பின்னேருங்கூட) பரம சாம்பவர்கள். குடிப்

பிறப்பின் வசதியால் சிறு வயதிலே சிவபெருமானுடைய பெருமைகளை உணரப் பெற்றிருந்தார். அத்தகையவரையும் ஐம்புலப் பகை அயர்ப்பிக்கின்றதாம். குடிப் பிறப்பின் குணம் நழுவிற்றும். மதனன்=காமன். கருணை ஆர் அமுதஉததி= கருணையாகிய நிறைந்த கடல். திவலை=சிறு துளி இந்திரிய வாஞ்சை=பொறிகள் தூண்டும் அவாக்கள். அவத்தம்= பயனில்லாமை.

புல்லிய லெருக்கம் தும்பைகொண் டுன்னைப்
பூசிக்க நூல்எலாம் புகலும்;
புல்லுவ ததனுல் முத்தியாம் திருவைப்
புன்மையேன் இதைஅறிந் திருந்தும்
புல்லிய கரண வயத்தனுய் வீணுள்
போக்கினன், சிவசிவ, நரகம்
புல்லிய எனக்கே வெல்லரும் பகையாய்ப்
பொருந்தினென் கரும்பனுக் கனலே. (8)

புல்லும் எருக்கும் பூசைக் கிருந்தும்
புல்லியேன் வீணுள் போக்கினேன் என்றது.

[புல்=அறுகம்புல். இயல் எருக்கம்=எங்கும் கிடைக்கும் எருக்கம்பூ. புல்லுவது=தழுவுவது. புல்லிய கரணம்= இழிந்த கரணங்கள். புல்லிய=பொருந்தும்படி. எனக்கே பகையாய்=ஆத்துமத் துரோகியாய். கரும்பனுக்கு அனலே= மன்மதனுக்குத் தீ ஆனவனே ]

இன்னல் விடயத் திழுத்தழுத்தும்
எதிரியான வாதனையோ
டென்னை உடலிற் பிணித்தனையே
என்ன செய்வேன் எம்மானே
மன்னு மதத்தால் ஈர்த்தோடு
மழவேற்ருேடு மொருநுகஞ்சேர்
சின்னஞ் சிறிய மெலிகன்றென்
செய்யுமதவேட் செற்ருேனே (9)

என்உயிர்தனை ஏன் வாதனை யுடன்
பின்னிப் பிணித்தனை பிரானே என்றது.

[இன்னல் விடயம்=துன்பந்தரும் ஐம்புல நுகர்ச்சி. வாதனை=வாஸனை; இருதயகிரந்தி. மழஏறு=இளவயதுள்ள காளை. எடுத்துக் காட்டணி. பாச விமோசனம் வேண்டினோர் பசுபதியையே சேவிக்கவேண்டும்.]

வலிய பொறிகள் வெறியடக்க
வலியின் றிறைவா, பிறப்பிறப்பின்
நலிவை நினைந்து நினைந்துள்ளம்
நடுங்கு கின்றேன், என்செய்வேன்?
கலியை ஒழிக்க எங்குறுவேன்
கடையேன் யாது கடவேனே?
பொலியுன் சரண கமலமிசை
புரண்டு புகலே புகுவேனே. (10)

வெறிப்புலன் அடககி வெல்ல கில்லேன்
பிறப்பிறப் பஞ்சினேன் பிரானே என்றது.

[வலி இன்று=வலிமை இல்லேன். நலிவு=வருத்தம். கலி=துன்பம். யாது கடவேன்=என்ன செய்வதற்கு உரியேன்.]

இகழ்ந்துன் ஆணை அறநெறியை
இகந்தூ ரேறுய் நாணிலியாய்
உகந்த வாறே உழல்கின்றேன்;
உடுவின் பதியின் கலைசூடீ
மிகுந்த பற்பல் பிறப்பினுமிவ்
விதமே உழன்றேன் வினைக்கடலைத்
தகைந்துன் அருள்தா ராயெனில்யான்
தாண்டு மாறென் தயைக்கடலே. (11)

அறநெறி பிறழ்ந்த அறிவி லேனே
இறைவ ஏன்றுகொள் எனப்புகல் புக்கது.

[இகந்து=மீறி, தாண்டி. உடுவின் பதி=சந்திரன். தகைத்து=தடுத்து. 'ஆள்வாரிலி மாடாய்' அலேவோனுக்கும் ஆனேறு ஊர்ந்தான் அருள் செய்வான் என்பது அறியற் பாற்று.]

பொறுத்தே ஆள்வீர், பெருங்கருணைப்
  புணரி யானீர், எளியேனை
ஒறுத்தால் உய்யேன் என்றஞ்சி
  உற்றுர் குற்றம் அத்தனையும்;
மறுத்தான் கணத்தா யிரம் அறிந்தும்
  புரிவேன், கயிலை மலையரசே,
உறத்தான் சொலத்தான் நாணுவனே
  உடையாய் உனது திருமுன்னே. (12)




பாவம் அறிந்தும் பல்காற் பயில்வேன்
தேவ உன் திருமுன் சேர்வதெவ் வாறெனல்.

"சிறியோர் செய்த சிறுபிழை எல்லாம்
பெரியோ ராயிற் பொறுப்பது கடனே"

"சிறியோர் பெரும்பிழை (அடிக்கடி) செய்தன ராயின்
பெரியோர் அப்பிழை பொறுத்தலும் அரிதே"
(வெற்றி வேற்கை)

[மறு=குற்றம். அறிந்து அறிந்தும் கணத்துக்கு ஆயிரம் குற்றம் புரிவேன். திருமுன் உறவும் மன்னிப்பு விண்ணப்பம் சொல்லவும் நாணுவேன் என்ருர்.]

உயிர்ப்புள் ளொடுங்கும் போதுமனம்
  உன்ருட் போதில் ஒப்புவித்தோன்
அயிர்ப்பின் றெல்லாப் பிறவிவினை
  அகற்ற வல்லோன் ஆகுவனே;

உயிர்ப்புள் ளொடுங்கும் போதுநினே
வொழியு மாகில் உடையர்னே!
செயிர்ப்பு மூன்ருல் வருந்துமனம்
சேர்த்த வகையென் தெரியேனே. (13)

ஆவி அடங்கும் போதில் அரன்தாள்
பாவி நினேக்கும் பரிசின் றென்னல்.

[உயிர்ப்பு=பிராணன் அயிர்ப்பு=ஐயம். இன்று= இல்லாமல். செயிர்ப்பு மூன்று=குற்றங்கள் மூன்று. அவை யாவன:—வாதம் பித்தம் கபம் எனவும் மனே மக்கள் சொத்து என்னும் மூவேடணே எனவும், ஐயம் திரிபு அறிவொழிவு எனும் பாவனே மூன்று எனவும் இன்னும் பலவு மாகக் கூறுவர்.

"பவனமாய்ச் சோடையாய்" எனவும், "புலனேந்தும் பொறி கலங்கி" எனவும், "அங்கத்தை மண்ணுக் காக்கி" எனவும் தொடங்கும் தேவாரப் பாக்கள் நினேக்கத் தக்கன.]

ஆவி வெளிபோ வதற்கங்கத்
தமைந்த கட்டுத் தளர்வுறுங்கால்
மேவி உறவோர் குழுக்கவலே
மிக்குக் கதறும் வேளேயினில்
ஓவில் அறிவங் கிருந்தாலும்
உறுகண் பலவுற்றிடும் ஏழை
தாவில் உறுதியொடு மனத்தைச்
சமர்ப்பித் திடலா மோசிவமே. (14)

அறிவிருந் தாலும் ஆவிபோம் போதில்
திறன்இரா தரனேச் சிந்திக்க என்றது.

[உயிர் பிரியுங்காலத்து உடம்பின் சந்தி பந்தங்கள் தளர்ந்து மிகவும் துன்பம் உண்டாகும். உற்ருர்கள் சுற்றி யழுவர். மரண பயம் வருத்தும். இவற்ருல் கலக்குறும் மனம் சிவனே நினேயத்திறன் அற்றதாகும். அங்கம்=உடம்பு.

உறுகண் = துன்பம், இடையூறு. தா இல் உறுதி=கெடுதி இல்லாத உறுதி.]

இன்றேஎன் ஆவிதனை உடலுடைமை
ஆவனமற் றுளவற் றோடும்
நன்றேஅர்ப் பிக்கின்றேன், மலைமடந்தை
தனையிடங்கொள் நாத, நாயேன்
நின் தூய நிலைதெளியேன், கருமங்கள்
செய,யோக நிலையில் நிற்க,
ஒன்றேனும் வலனல்லேன், துணையிலேன்,
சரணுனக்கே உறுகின் றேனே. (15)

ஞான முதலா நவில்நெறி முயலேன்
ஆனேன் இன்னே அடைக்கலம் என்றல்.

[கதி அடைதற்குரிய ஞானம் பத்தி கன்மம் என்னும் நெறிகளில் ஒன்றிலேனும் நிற்க வல்லுநன் அல்லேன். ஆவி உடல் பொருள் அனைத்தும் உனக்கே கையடையாக்கினேன் என்கின்றார். "அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்—குன்றே அனையாய் என்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ" என வாதவூர் அடிகள் அருளியதையும் நினைக.]

எல்லா உலகும் ஈன்றானை
முன்னே ஈன்ற இறையோனே,
எல்லா மறையும் புராண முதற்
கலைகள் எல்லாம் அவற்கீந்தோய்,
எல்லாருக்கும் முதற் குருவே,
ஆன்ம போதம் இசைப் போனே,
நல்லாள் கணவா, உனக்கேஇந்
நாளே தஞ்ச மானே. (16)

மறையவற் படைத்து மறை முதற்கிளந்த
இறையவற் கின்றே யான் அடைக் கலமெனல்.

[பிரமனைப் படைத்து அவனுக்கு வேத முதலிய கலைகளை எல்லாம் சிவனே அளித்தனன் என்று சுவேதா சுவதர உப நிடதம் கூறும். சிவனையே ஜகத்ரு என வேதம் கூறும். 'ஸர்வாதிகுரு' சிவனே என்றார் இவ்வாசிரியரே சிவதத்துவ விவேக நூலில் 'ஈச்சுவரனுடைய அருளால்தான் ஒருவனுக்கு அத்துவித வாசனை உண்டாகின்றது' என்பர் பெரியோர். பிரம வித்தியா நாயகி ஆதலால் அவளே நல்லாள் ஆவாள். "அவன் அன்றி (வீடு பேறாகிய) ஊர் புகுமாறு அறியேனே" என்றார் திருமூல நாயனார். அவனுக்கு இன்றே நான் அடைக்கலம் ஆனேன் என்கின்றார் ஆசிரியர்.

இலகறிவுள் ளனஅதுஇல் லனஎவைக்கும்
வேறானாய்; ஏகன் ஆனாய்;
மலரவனே முதற்பசுக்கள் தமைமோகக்
கயிற்றார்த்தாய்; மாரற் செற்றோய்!
பலமுறுதம் செயல்நடத்தி உன்பாதம்
சரண்புகுந்த பசுக்கள் தம்மை
நலமிகுமின் புறமேலாம் பரவெளிசேர்ப்
பவ! தஞ்சம் நயந்தேன் நானே. (17)

எல்லாம் ஆகி வேறுமான
நல்லான் சரணே நயந்தேன் என்றது.

[மண் முதல் நாதம் ஈறான தத்துவம் எல்லாம் சிவனே. உயிர்க்கு உயிரும் சிவனே. எனினும் அவன் அவற்றுள் ஒன்றும் ஆகாதவனே. ஆன்மாக்கள் அனைத்தையும் பாசத்தாற் பிணித்து ஏவுபவனும் பாசம் நீக்கி அருளுபவனும் ஆகிய பசுபதியும் அவனே.]

கரணக் குறும்பைக் கடந்தவிரும்
கனயோ கியர்தம் நினைவொன்றி
விரவப் படுவோய், அவராவி
விடுங்கால் உணர்வின் மேவிவெரு

வரலைக் கடக்கப் பிரமவித்தை
வைக்குங் குருவே, உனையேநான்
பரவிப் பணிவேன் எந்நாளும்,
பரமா, கயிலைப் பயில் சிவனே. (18)

ஞானியர் உளத்தில் தியானிக் கப்படும்
கோனையே பணிந்து கூடுவன் கதிஎனல்.

[கரணக் குறும்பு=உட்கருவி புறக் கருவிகளின் சேட்டை. அவிரும்=விளங்கும். வெருவரல்=அச்சம். சிவனே அனைவராலும் தியானிக்கப்படுபவன் என வேதம் கூறும். அவனே பிரமவித்தை உபதேசிக்கும் குரு ஆனவன். அவனே வீடுபேறு தருபவன். வீடுபேறும் அவனே.]

அமரர் தமக்கும் நீக்குவதற்
கரிய பிறவி நோய்தனைநின்
தமரிற் சிறந்தார் தமக்கான்ம
போத மருந்து தந்தொழிக்கும்
அமல; வரத ! நீள்வெம்மை
ஆறுப் பிறவி நோய்ப்பட்டேன்,
அமரர் கோவே பவப்பிணிவைத்
தியனே உனக்கே அடைக்கலமே. (19)

பவரோ கவயித் தியனே பிறவிப்
படுவா தைதவிர்த் தருளீகவெனல்.

[சாவாதவர் எனப் பொருள் தரும் அமரர் என்ற பேருடைய தேவர்களும் சாகின்றவர்களே. செத்தார் பிறப்பர். பிறந்தார் சாவர். சாவா மூவாத் தனிப்பரம் பொருள் சிவனே. அவனே 'பவரோக வைத்தியநாதன்.' பவரோகம்=பிறவிப்பிணி. பிறவி நோய் அநாதியாகத் தொடர்ந்து வருவதாதலால் நீள்நோயும், தீராது தொடர்ந்து துன்பம் தருவதால் வெம்மை ஆறாத நோயும் ஆயிற்று.]

நின்அடியன் நானென்ப தென்று(ம்)நிலை
யாம்வாய்மை, நின்பால் நாயேன்
பன்னுவதென்? நீயேதான் அறியாயோ
பரசிவமே, பற்றென் றின்றி
இன்னலினிற் சுழல்கின்றேன் என்பது(ம்)நீ
அறிந்ததுவே, எளியேன் பாடு
சொன்னதுவும் பிழை,யருளாற் பொறுத்தேன்று
கொண்டு துயர் தொலைத்தாள் வாயே. *(20)*

யான்உன் அடிமை என்துயர் அறிவை
நான் சொலத் துணிந்த நவை பொறுத் தருளெனல்.

[“என்னை உனக்கு அடியான் என்று பிறர் எல்லாம் பேசா நிற்பர்”: “மனத்திருந்த கருத்து அறிந்து முடிப்பாய் நீயே”. அண்ணல் ! ஆள் எனை என்று சொன்னால் “அடிமை சால அழகுடைத்தே” “ஆற்ற கில்லேன் அடிநாயேன்” என் அச்சத்தால் எங்கள் பெருமான் உனக்கு ஒன்று உரைத்தேன். மன்னித்து அருள்க.]

வேண்டியவை வேண்டியுற வேண்டியுனைப்
புகழ்வேதன் விண்டு வேந்தன்
வேண்டிவெகு நாட்செவ்வி காத்திருப்பர்,
விசுவாதீ சுரனே, உன்பால்
வேண்டுகின்றேன் இப்பொழுதே அருளுகெனப்
புழுவனையேன் வேண்டும் அஃதும்
வேண்டும்எளி யவர்க்கிரங்கும் நின்கருணை
தனைநம்பி மேவி னேனே. *(21)*

நின்று காத்திருப்ப நெடுமான் முதலோர்
இன்றே அருள்கென் றிரப்பன் யான்எனல்.

[வேண்டியவை = விரும்பினவற்றை. வேண்டி = பிரார்த்தித்து. உறவேண்டி = பெறுவதற்காக. வேதன் = பிரமா. விண்டு = திருமால். வேந்தன் = இந்திரன். செவ்வி = காண்

பதற் கேற்ற சமயம். விசுவாதீசுரன்=உலக முழுவதற்கும் பெருந்தலைவன். பெரியோர் பலர் காத்திருப்பச் சிறியேன் உடனே அருள்செனை உன்னை வற்புறுத்துவது உனது கருணை யின் பெருமையை நம்பியே என்றார் ]

கரும ஞானப்பரப்பைக் கைக்கொள்ளல்
அரிதெனநான் கண்டேன், பாவக்
கருமமா தரிக்குமனம் தனை அடக்கும்
திறமும் இலேன், கண்ணால் மூன்று
புரமும்ஆர் அழற்களித்தாய், பிறப்பிறப்பாம்
பாழ்ங்கிணற்றுட் புகுந்து வீழ்ந்தும்
வெருவலேன், கைந்நீட்டித் தாங்க நின்றாய்
எனும்உறுதி மிகவுற் றேனே. (22)

திருவடி பற்றித்தியக்கொழிந்தேன் மற்று
ஒருபிற முயற்சியும் உஞற்றகில் லேனெனல்.

[பிறவிக் கடலைக் கடக்க விரும்பினோர் கைக்கொள்ளற் குரிய கருமம் ஞானம் என்னும் நெறிகளைப் பற்ற என்னால் முடியாது. சரணாகதியுற்றேன். என்னைத் தாங்கிக் கொள்ள உன் கருணையுள்ளது சம்புவே என்கின்றார். ஆர் அழற்கு=மிக்க நெருப்பினுக்கு. வெருவலேன்=அஞ்சேன்.]

எவ்வமிகு பிறப்பிறப்பாம் இழுக்குடையிவ்
வுலகில் வழித் துணைநீயே தான்;
கவ்வைமிகு கரையில்லாப் பவக்கடலைக்
கடந்திட வுன் தென்பாற் காணும்
அவ்வெருவில் முகந் தொழுவோர் பேறுளர்;
கோரபவத் தளவில் காலம்
வெவ்வினையேன் வருந்தினென், அகோரசிவ
காத்தருள வேண்டுவேனே. (23)

தக்கிண முகத்தால் தயைசெய் திறைவ
இக்கலி நீக்கி எனையாள் கென்றது.

[எவ்வம்=துன்பம். இழுக்கு=வழுக்கல். கவ்வை மிகு பவக்கடல், என இயைக்க. கவ்வை=ஒலி. துன்பம் கரையில்லா என்பது இடைப் பிறவரல். வெரு இல் முகம்= அகோர முகம். அது சதா சிவ மூர்த்தியின் முகங்கள் ஐந்தனுள் தென் திசையில் உள்ள முகம். அகோர முகத்தைத் தியானிப்போர் பிறவிக் கோரம் நீங்கப் பெறுவர்.]

பந்தமும் வீடும் தந்திடும் ஈசன்
பல்லுயிர்க் கொருவன்நீ அலையோ?
வெந்துயர்த் தணலிற் புரண்டுவே வேற்கு
வேறிலை கதிபசு பதியே,
உந்திடும் கோரப் பிறவிவெள் ளத்தில்
உறுகணே உழந்தெளி மைக்கு
முந்திலாய் அஞ்சித் தஞ்சமென் றடைந்தேன்
முதல்வனே ஏன்றுகொண் டருளே (24)

உன்னை ஒழிய உறுதுணை உயிர்க்கிலை
என்னையும் கருணையால் ஏன்றருள் என்றது.

[பந்தம்=பிறவித்தளை. வீடு=மோக்ஷம். உந்திடும்= உருட்டிக்கொண்டுஓடுகின்ற. உறுகண்=துன்பம். எளிமைக்கு முந்துஇல் ஆய்=தீனத்துவத்திற்கு முதன்மையான இருப்பிடம் ஆகி. ஏன்றுகொண்டு=அஞ்சலென்று தஞ்சம் அளித்து ஏற்றுக்கொண்டு. வேவேற்கு=வேகின்ற எனக்கு.]

தொண்டர்தம் துயரைத் தீர்ப்பவ னுகத்
துலங்குபே ரொளிப் பெருமானே,
அண்டருள் முதலாய் நூறுகற் பங்கள்
ஆட்சிசெய் பிரமனுக் கனைத்தும்
உண்டுசெய் ஆற்றல் கடைக்கணுல் உதவும்
ஒருவனே, அவிச்சையாற் சுழலும்
மிண்டிய பந்த மொழித்துமெய்ஞ் ஞான
மேவுவித் தெனையும்ஆள் இறையே. (25)

சிருட்டி முதலேங் தொழில்செயும் இறைவ
அருட்டிருக் கண்பார்த் தாள்எனே என்றல்.

[சிவனே துயர்தீர்க்கவல்லான். ஞானப்பேரொளிமயன். பிரமனைப் படைத்து அவனுக்குப் படைக்கும் ஆற்றல் அருளினவன். கடைக்கட் பார்வையால் அவிச்சையை அழிப்பவன். அவன் எனக்கு அருள்க என்றவாறு.]

மண்ணவர் விண்ணேத் தோலெள உடன்மேல்
வனைந்துகொண் டிட வலார் எனினும்
திண்ணம் ஓர்குறையும் இலிஉனே அறியார்
தீர்வுறுர் துக்கங்கள் சிவனே,
புண்ணிய! நின்னே அறியும்நன் ஞானம்
பொருந்துரு துனதருள் இலதேல்,
நண்ணுவ தெவரை நினையலாற் பிறவி
நடலையில் வருந்துநா யேனே. (26)

உனதருளின்றிப் பிறவி யொழியாது
என அறிந்துனேயே புகலடைந் தேனெனல்.

["வான் பசுந்தோல் போற் சுருட்ட வல்லோன் பசுபதியைத் தான்பரவா தெய்துறும் வீடு" என்பது சுவேதாசுவதர உபநிடதக் கருத்து. "சிவன் அருளின்றிச் சேர்முத்தி இல்லை. சிவன் அருளின்றிச் சேர்போகம் இல்லை. சிவன் அருளிலதேல் தேவருமில்லை. சிவன் அருளால் எல்லாம் சேர்கின்றனவே" என்று சூத சங்கிதை கூறுகின்றது. அவன் அருள் பெற்று அவன்தாள் வணங்குவதே அறிவுடையார் செய்யத்தக்க முயற்சியாம். பிறவி நடலை = பிறப்புத துன்பம்.]

மறைபொரு ளனவாய்ச் சுயம்புவாம் வேத
வாக்கியத் தாற்புரா ணத்தால்
திறமுறச் சாதிப் பரியபல் சமயத்
திறத்தர்தந் திரங்களால் பயன்என்

பெறுவது? வெற்றுக் கலகஉல் லாசப்
பேச்சுக்காம் கல்வியாற் பயன்என்?
உறுவருன் அருளாற் பக்குவர் ஞானம்
உயர்பர வித்தியேச் சுரனே. (27)

வேத புராண மிகுதந்திர நூல்
ஓதியும் அறிவருள் இன்றியா காதெனல்.

[வேதங்கள் இரகசியமான பொருள்களை யுடையன ஆதலின் மறையெனப் பெயர் பெற்றன. வேதம் சுயம்பு என்பர். சுயம்பு = யாராலும் செய்யப்படாதவை. "காதி மோதி வாதாடும் நூல் கற்றிடுவார்; காலனூர் புக்கலைவார்" (திருப்புகழ்) அதனால் கல்வி மட்டும் பயன் தராது. சிவன் அருளே சிவஞானம் தரவல்லது. தந்திரம் — ஆகமங்கள். கலக உல்லாசப் பேச்சு—பட்டி மண்டபத்தில் கத்தி மகிழ் கின்ற பேச்சு "கற்றுரை யான் வேண்டேன் கற்பனவும் இனி அமையும்...உன்குரை கழற்கே கசிந்துருக வேண்டு வனே" (திருவாசகம்.)]

தீயனேன் தீய பொறிவழித் திரிவேன்
துரோகமே செய்வென் எப் போதும்,
நாயக! லோபம் உறையிடம் ஆனேன்,
நன்மையின் மணமும்நான் அறியேன்,
ஆயினும் பிடித்தேன் சிக்கென நினதாள்
அரவிந்தம் அடைக்கலமாக,
நாயினும் கடையேன் ஆயினும் விடுதல்
ஞாயம்அன் றனங்கனுக் கனலே (28)

கடையவ னேனைக் கைவிடல் வேண்டா,
உடையவ னேஅடைக் கலம்உனக் கென்றது.

[தீயனேன்—தீமையின் உருவாகிய யான். லோபம்— பற்றுள்ளம் சிக்கென—கெட்டியாக. அரவிந்தம்—தாமரைப் பூ அனங்கனுக்கு அனலே—காமனுக்கு நெருப்பாகினவனே. தீமைக்கெல்லாம் தலைமையான காமத்துக்குரிய தேவனை

அழித்த சிவன்தாளை உறுதியாகப் பற்றினவர் தீமை எல்லாம் நீங்கித் திருவருளுக்கு உரியராவர்.]

"பணிந்தாரன பாவங்கள் பாற்ற வல்லீர்"
(அரசுகள் தேவாரம்)
"பிழைத்தவை பொறுக்கை எல்லாம்
பெரியவர் கடமை போற்றி" (திருவாசகம்)

குற்றம்எண் ணிலஎன் பாலுள,ஆய்ந்துன்
குரைகழற் சரண்புகத் தகுதி
அற்றவன் எனக்கை விடுதியேல் அரசே!
அக்கணத் தச்சத்தால் அழிவேன்;
பெற்றவள் பொல்லான் எனவிடப் பெற்ற
பிள்ளையை ஊரின்உள் ளவர்தாம்
மற்றுகந் தேற்றுக் கொள்வரோ கருணை
வள்ளலே மலைமகள் பதியே. (29)

பெற்றவள் பிள்ளையின் குற்றத்தாற் கைவிடாள்
அற்றெனப் பிழைபொறுத் தருள்க என்றது.

["குற்றம் பார்த்தாற் சுற்றம் இல்லை" அன்பில்லா மகனுண்டு, அன்பில்லாத் தாயில்லை. தாயார் வெறுத்தால் ஊரே வெறுக்கும். "தாயே என்று உன்தாள் அடைந்தேன் தயா நீ என்பால் இல்லையே—நாயேன் அடிமையுடன் ஆக ஆண்டாய் நான்தான் வேண்டாவோ" (திருவாசகம்.)]

பொறுத்தருள் செய்யற் பாலவே சிவனே
புன்மையேன் முன்னமும் இனியும்
வெறுப்பன செய்த செய்வ எல்லாமும்;
அன்றெனில் மிகைசெயு மனமே
ஒறுத்திடற் பால தளவறும் இன்னல்
உற்றுனக் கேபரம் ஆனேன்,
அறுத்துற வெனைத்தள் ளுவதழ கன்றுன்
அடிமலர் பிடித்தல றுவனே. (30)

அடங்கா மனமே அடக்கற் குரியதுஎன்
இடங்கோ பங்கொளேல் இறைவா என்றது.

[யான் முன்னர்ச் செய்தனவும் பின்னர்ச் செய்பவும் ஆன குற்றம் எல்லாம் நீ பொறுத்தல் வேண்டும்—குற்றம் செய்வித்தது என் கொடிய மனமே. உன் சினத்தை அங்கே செலுத்தி அதனை அடக்குக. உன்னை அடுத்தவன் யான். அடாத இயல்பினது என் மனம் ]

முற்றுணர் வுடையை, கருணையங் கடலை,
முடிவறும் ஆற்றலை, சிவனே!
மூற்றிய துயரக் கடலிடை மூழ்கும்
மூடனேன் றனைநினை யாத
தெற்றினுல் அரசே? பாவியாம் மனத்தேன்
எவ்வம் உள்ளனஎலாம் உழந்தேன்,
எற்றினுல் மிகையாம்? ஒருவனை, இந்த
எளியனை, ஏற்றிடிற் கரையே. (31)

அறிவருள் ஆற்றற் குறைவிலாஇறைவ!
அறவையேற் கருளிற் குறைவென்என்றல்.

[சிவபெருமான் எல்லாம் அறிந்தவன் - எல்லையில் அருளாளன்; யாதும் வல்லவன். அவன் எளியோர் துன்பத்தை அறிந்து இரங்கி அவரை அளிக்கவல்லவன். ஆதலின் எளியரில் தலைவனுன என்னை நீதான் ஆட்கொள்ள வேண்டுமென ஆசிரியர் முறையிடுகின்ருர். உடையை — உடையவனுக இருக்கின்றனை. கருணையங் கடலை — அருட்கடலாக இருக்கின்றனை. நினையாதது எற்றினுல் — நினைக்காமல் இருப்பது எதனுல்? எவ்வம் — துன்பம். ஒருவன், எளியவன் என்றது ஆட்கொள்ளற்கு உரிய தகுதியை உணர்த்தின ]

உற்றவ ரில்லார்க் குறுமொரு துணையே
உறுகண்மிக் குற்ருெர்பற் றிலனுய்
உற்றனன் எடுத்தாள் என்றடைந் துய்யும்
ஒருநெறி ஒழித்தவர் யார்கொல் ?

மற்றுனே வேண்டும் வழிபிறி துண்டேல்
வகுத்திடாய் வல்லையேல், நமக்குள்
உற்றிடும் உறவை ஓர்ந்து பேரருளால்
உய்யக் கொண் டருளுடை யானே. (32)

சரண் உனக்கென்று சார்நெறி யல்லால்
அர,பிறி துளதேல் அறைகென வேண்டல்.

[உற்றவர் — ஆதரிப்பவர். உறுகண் — இடுக்கண். உற்றனன் — வந்தடைந்தேன். சரணுகதிமார்க்கத்தை அழித்தவர் யார்? ஒருவருமிலர் என்றபடி. சரணுகதி வழியைவிட உய்யும் நெறி வேறில்லை. நமக்குள் உற்றிடும் உறவு—"என்று நீ அன்று நான் நின்அடிமை" என்ற உறவு. "தன் கடன் அடியேனையும் தாங்குதல் என் கடன் பணி செய்து கிடப்பதே" (அரசுகள் தேவாரம்)]

இந்தநாள் வரையும் பிறப்பெனும் சேற்றில்
இழிவிலங் கனையனேன் சுழன்றேன்,
எந்தையே அயர்த்தேன், மற்ருெர்பற் றில்லேன்,
என்னைமேல் எடுத்தருள் செய்யாய்,
மந்தனுய்ச் செய்வ தவிர்வழூர் கில்லா
வானரம் ஆயினேன், அடித்துத்
தந்தந்தான் இளிக்கச் செய்துபார்க் கின்ருய்,
சம்புவே கண்டதென் பலனே. (33)

பன்றியும் குரங்கும் போன்ற பாவியை
என்றெடுத் தருள்செய இசைவை என்றது.

[இழிந்த பிறவிச் சேற்றில் திளைப்பதனுல் பன்றிக்கும், ஒன்றுவிட் டொன்ருக ஆசைக் கிளைகளில் அலைவதால் குரங்குக்கும் மனிதன் ஒப்பாவன். விதிவிலக்கு அறியாதவன் மந்தன். தந்தம் — பல்.]

ஈன்றவள் ஈன்ருன் மகன்எனு மோகம்
எனுங்கயிற் றென்னைநன் கார்த்தே
ஏன்றநீள் பிறவிக் கடலிடை அழுத்தி
யாதுநீ பெற்றனை இறைவா!
ஆன்றமங் கலமாம் திருவருள் இந்த
அமயமட் டின்னல்எத் தனையும்
நோன்றிருந் தேன்பால் தோன்றில தென்னே?
நுகர்சுக வரைகையில் இலனே. (34)

திருவருட் செவ்வம் சேர்வதெப் போதோ
அருவினைப் பிறப்பில் அயர்ந்தேன் பால்எனல்

["தந்தைதாய் தன்உடன் தோன்றினர் புத்திரர் தாரம் என்னும்—பந்தம் நீங்காதவர்க்கு உய்ந்து போக்கில்" (ஆளுடைய பிள்ளையார் தேவாரம்) என்பர். இறைவன் அருளினுல்தான் பந்தம் நீங்கும். இனியும் பிறவி நோய் ஆற்றேன் ஏன் இன்னம் அருள்கிலே! பாக்கிய ரேகை தானும் என் கையில் இலதோ என்கின்ருர்.]

இருவர்க்கும் பொதுவாம் இன்பமா நிதியை
எந்தைநீர் மறைத்தனு பவிப்பீர்,
பொருவரு மாயைத் திரையினுல் மறைத்தீர்,
பொய்ம்மையே பிச்சைதேர்ந் துண்பீர்,
பெரியிர்நீர் உலகம் எவைக்கும். நல் ஒழுக்கப்
பிரதிட்டை செய்பவர் நீரே
சரியிது தானே எனைப்பிரிந் திருத்தல்
தந்தையீர் சார்பரு ளீரே. (35)

பொதுவாம் இன்பைத் தனியே நுகர்வீர்
இதுவோ பெரியோர்க் கியல்பாம் என்றது.

[ஈசுவரனும் சீவனும் உடன் பிறந்தவர் என்பது வேதாந்திகள் மதம். ஈசன் பிரமானந்தத்தை என்றும் நுகர் கின்ருன். சீவன் அவிச்சையொடு சேர்ந்து அவ்வின்பத்தை

இழந்தான். ஈசுரனே சீவனுடைய அவிச்சைச் சேர்க்கையை நீக்கி, இன்பத்திற் பங்கு அவனுக்கும் அளிக்க வேண்டும். அங்ஙனம் இருக்க என்பங்குச் சொத்தையும் உம்பங்கில் வைத்துக்கொண்டு "பத்தூர் புக்கு இரந்துண்டு படிருடித் திரிதல்" பான்மை அன்று என்றூர். பொருவரு—ஒப்பில்லாத மாயையே சிவனையும் சீவனையும் பிரித்து வைத்துளது என்பர் வேதாந்திகள்.]

பல்வகைப் பிறவிப் பரவைநின் றுன்னைப்
பாலியேம் என்பதுன் கருத்தேல்,
நல்லதங் ஙனமே ஆகுக பகவ,
நான்எவண் எப்பிறப் புறினும்
நல்லநின் தொண்டர் இணையறும் இன்பம்
நல்குசே வடிமலர்த் துகளால்
எல்லையின் றினிமேல் வரும்உடல் அனைத்தும்
இயற்றின ஆகுக இறையே. (36)

இன்னும் பிறவி எனக்குண் டென்றால்
நின்னடியவர் அடித் துகள் கொடாக்கென்றல்

[பரவை—கடல். பாலியேம்—காப்பாற்றேம்—நான் எங்கே எப்பிறப்பிற் பிறந்தாலும்—அவ்வுடம்பினை நின் அடியார் திருவடிப் பொடிகொண்டு செய்க என வேண்டு கின்றார். துகள்—பொடி. எல்லை இன்று—எல்லை இல்லாமல் இயற்றின—படைக்கப்பட்டன ]

என்பிலாப் புழுப்பாம் புயர்மர(ம்) முதல
இல்லையோ இறைவநின் பாதத்
தின்பவா சனைசேர் தென்றல்சென் றுலவும்
இடங்களில், எளியர்துன் பொழிப்போய்!
வன்பவ நெருப்பு மாநதிப் புரளும்
வல்வினை யேனையும் படைத்தி;
இன்புறுந் தனைநீ அவற்றுள்ஒன் றாக
எத்தனை தரமும்வேண் டிடினே. (37)

அத்தநின் அடித்தொடர்பு அடியேற் குளதேல்
எத்தனை பிறப்பெனினும் இளையேன் என்றது.

[என்பு—எலும்பு பவநெருப்பு மாநதி—பிறப்பாகிய பெரிய நெருப்பு ஆற்றிலே. படைத்தி—படைப்பாயாக. நின் திருவடி சம்பந்தமுள்ள எந்த இடத்திலேனும் எப்பிறப்பிலேனும் பிறப்பதானால் பிறப்பை மகிழ்ந் தேற்றுக் கொள்வேன் என்றார். நீ இன்புறுந்தனை எத்தனைதரம் வேண்டிடினும் படைத்தி என இயையும்.]

**உயிர்ப்பொரு சிறிதே கழுத்தினில் துடிப்ப,**
**உற்றவர் சுற்றமும் நெருங்கி**
**அயிர்ப்பொடு நோக்கிக் கவலையின் மிக்கோர்**
**ஆகியப் போதினிற் பேசும்**
**பயிர்ப்புறு மொழிகள் செவிப்புலந் தைக்கப்**
**பதைக்கும்அப் போதுயிர், சிவமே**
**உயிர்க்குயிர் ஆகி நின்றநின் பாதம்**
**உணர்ந்துயத் திருவருள் உதவே. (38)**

மரணத் துயரத் தலமரு காலைச்
சரணத் தினினைப் பருளுகசிவ எனல்

[உயிர்ப்பு—மூச்சு. அயிர்ப்பு—ஐயம். பயிர்ப்பு--அருவருப்பு. உயிர் உடலைவிட்டு நீங்கும் காலத்தில் உள்ள நினைவுக்கேற்பவே மரணத்தின்பின் அடையும் கதியிருக்கும் என்ப. அவ்வேளையில் சிவன் சேவடியை நினைக்கும் பேறும் சிவன் அருளால்தான் சித்திக்கும். ஆதலால் இறைவனே நீயே எனக்கு அப்போது உன்னை நினைக்க அருள்க என வேண்டுகின்றார் ஆசிரியர்.]

**சிந்தையின் மெலிந்து கண்கணீர் நிறைந்து**
**செறியுற வினரைப் பாராமே**
**உந்துகா தலினுல் முந்துவந் தரற்று**
**வோர்குரல் செவிகள்கே ளாமே**

அந்தரான் மாவே அந்திய காலத்
தடைந்திடும் துயர் மதியாமே
இந்துவாழ் சடையாய் என்மனம் நின்ரு
ளிடைப் பதிந் திருக்கவேண்டு வனே. (39)

சாங்கால் பலநினைந் தேங்கா துன்னருட்
பூங்கால் நினையப் புரியெனக் கென்றது.

[உயிருக்கு உயிராய் இருத்தலிற் சிவபெருமான் அந்தரான்மா எனப்படுவான். சாங் காலத்தில் சிவனை நினைத்தல் எல்லாருக்கும் எளிதன்று—வாழுங் காலத்தில் சிவனை நினைந்து வழக்கம் உடையோர்க்கே அது வாய்க்கும். "பவனமாய்ச் சோடையாய் நாவெழாப் பஞ்சு தோய்ச் சட்டவுண்டும்—சிவனதாட் சிந்தியாப் பேதைமார் போல நீ வெள்கினேயே—கவனமாய்ப் பாய்வதோர் ஏறுகந் தேறிய காளக்கண்டன்—அவன தாரூர் தொழுதுய்யலாம் மையல் கொண்டஞ்சல் நெஞ்சே" (ஆளுடைய பிள்ளையார் தேவாரம்) என்றது நினையத்தக்கது.]

திருவளர்புன் முறுவல் முகிழ் முகமலரும்
திங்கள் தவழ் சடையு மல்லி
மருவளரு மலரழகு கவரொளியும்
மலைமகள் வாழ் வாமமேவிப்
பருமணியா தனத்திருப்பும் சிவமனைத்தும்
பாலிக்கும் பண்பு மாகி
ஒருவருக்கும் உணர்வரிதாம் தூயநின
துருவெனதுள் ஒளிரு மாதோ. (40)

சிவன தருளுரு வெனதுள் ஒளிருமென்
றுவகை மிகுமுரை இனிதுரைத்தது.

[மனம் கவரும் புன் முறுவல் முல்லை அரும்பு போலும். முகம் கமல மலர் போலும். பவளச் சடைமேல் தவளப் பிறை தவழும். திருமேனி நிறம் மல்லிகை மலர்போலும். பொருப்பரையன் மடப்பாவை இடப்பால் இருப்பாள்.

அருமணி ஆசனத் தமர்ந்திருப்பான் சிவன். அத்தகு திருவுரு என்உள் அகலாமல் இருக்கும் என்றது. இது தியானப் பாட்டு.]

கனவுதனி லெனினும் ஒரு நாளில்நான்
கற்பவுல கத்திலியல் பாய் [காண்பெனே
நனைவிரியு நளின நாண் மலரனவு னடியிணைகள்
நாயனைய பாவிஎங்கே
அனையதிரு அடிமலர்கள் காண்பேறு தானெங்கஃ
தாயினும் பசுபதிஎனக்
குனதுலக முழுதுமறி வுறுகருணை பெருகுநசை
உண்டுசெய் கின்றதை யரோ. (41)

அரிய காட் சியதரன் அடிமலர் எனினும்
பெரியகா ருண்யநசை பிறங்குவிக்கும் எனல்.

["எனைத் தெனைத்தது எப்புறத்தது எந்தை பாதம்" (திருவாசகம்) என்பர் இறைவன் அடியை அடைந்தோர். என்றால் எளியேன் காணல் எப்படி முடியும்? ஆயினும் அவனது பெருங்கருணைத் திறத்தை உலகத்தார் பேசக் கேட்டு நாயினேனும் காண நசையுற்றேன் என்றார். நனை—தேன்.]

வெண்டலைகை கொண்டைய மேற்றைய
வெளில்சேர் மயானத்திலே [வுணிலுண்க
குண்டைய குறட்பூத கணமொடு குலாவிடுக
கொள்கநீ வேடமெதுவோ
கொண்டவுன சரிதமறி யேனலேன் முதல்வநீ
கொண்டல் வணனுக்கு மிறைவன்
புண்டரிக மலரனவுன் அடியிணைகள் கனவினும்
போகவினி நான் விடுவனே. (42)

வெறுப்பன செயலொடு வேடநீ கொளினும்
வெறுப்பனே உனையான் விடகிலேன் என்றது.

[வெண்டலை—ஊன் கழிந்த தலை—ஐயம்—பிச்சை. ஐய—தலைவ, அழகியோய். வெளில்—பாடை. குண்டைக்குறட்பூதம்—மந்த இயல்பு உள்ளபூதம். "பூணுணுயின அரவங் கண்டஞ்சேன் புறங்காட்டாடல் கண்டிகழேன்" என்ற தொடக்கமாம் நம்பிகள் திருப்பதிகம் நினைக்கத்தக்கது.]

பூசு சாந்தம் வெண்ணீறே, பொருந்துங்
கோயில் சுடுகாடே,
ஏசு மெலும்பே அணியாக இருந்தால்
என்னே, மறைமுடிகள்
பேசு முனதீச் சரத்தன்மை, பிரமனுலு
மறைக் கொணுமோ
தேசு சேர்செம் பொன்மன்றில்
திருக்கூத் தாடும் பெருமானே. (43)

ஏழைவேடம் ஈசுரத் தன்மையை
மறைக்கா தென்ன வகுத்துரைத்தது.

[சாந்தம்—வாசனைக்கலவை. சிவனே பரப்பிரமம் என்பது உபநிடதங்களின் கருத்து. இதனை ஆசிரியர் அருளிச் செய்த சிவதத்துவ விவேகம், அரதத்தாசாரியர் அருளிச் செய்த சதுர்வேததாற் பரிய சங்கிரகம் முதலிய நூல்களால் நன்கு அறியலாம். திருவாசகத்திலுள்ள திருச்சாழற் பதிகமும் கந்தபுராணத்துத் ததீசியுத்தரப் படலம் பிரமன் உபதேசப் படலம் முதலியனவும் கருதத்தக்கன. வேதங்கள் உபநிடதங்கள் புராணங்கள் இதிகாசங்கள் எல்லாம் சிவ பெருமானுடைய பெருமையை உணர்த்துவனவே என்பது சான்றோர் கருத்து.]

ஆடி யருள்க புறங்காட்டில்,
அகிலங் கடந்த சிவபுரத்தில்,
கோடி மதிநேர் கயிலாயக்
குவட்டி னடியில், மணிமலைமேல்,

ஈடுமெடுப்பு மில்லாத ஈசா
உன்பாதுகை தலைமேல்
சூடு மடியார் தமக்கினிய
தொண்டா என்னைக் கொண்டருளே. (44)

அண்டர் நாயகவுன் தொண்டர் தொண்டனுக்
கொண்டருள் எனத்தனைக் கொடுத்தருளியது.

[எம்பெருமான் ஏது உடுத்து ஏது அமுது செய்து எங்கே எவ்வாறு இருப்பினும் "தம் பெருமைதான் அறியாத் தன்மையன்; அவனது தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே. அன்பர் பணி செய்ய எனை ஆளாக்கி விட்டு விட்டால் இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே" என்ற தாயுமானுர் பாடல் நினைக்கத்தது.

"உலகாளுவீர் தொழுமின்" என்ற பொன்வண்ணத் தந்தாதிப் பாடல் நன்மை வேண்டினுல் சிவன் அடியாரைப் பேணுமின். நரகம் வேண்டினுல் அவரை அலையுங்கள் என்று கூறும்.]

மறையின் அருத்த வாதங்கள்
வானோர் சீர்த்தி புகழ்ந்தாலென்?
அறையும் அவர்சிற் றறிவினரே,
அளவிலடங்கும் பெருமையரே,
பறையின் அவர்சீர் நினக்கிணையாம்
பான்மை யுடைத்தோ? சகத்திற்கென்
இறைவர் பலர்தாம் உளரோதான்?
இந்து முடிசேர் எந்தாயே. (45)

அருமறையின் மொழியனைத்தும்
அரன்சீரே அறைவ எனல்.

[அருத்தவாதங்கள் என்பன விதிக்கப்பட்ட ஒன்றை உயர்த்திக் கூறுவனவும் விலக்கப்பட்ட ஒன்றை இகழ்ந்து கூறுவனவுமாம். சுருதிய பொருளை நேரே கூறுதனவாம். வேதங்களில் ஏனைய தேவரை உயர்த்திக் கூறிய வாக்கியங்கள்

அருத்தவாதமெனவும் சிவபெருமானைக் கூறியவை யதார்த்த வாதமெனவும் மறைவல்லார் கூறுவர். தேவர்கள் ஏனையோர் எல்லாம் சிற்றறிவினரே. சிவபெருமானே சர்வக்ஞன். "சிவனெனுடுக்கும் தெய்வம் தேடினுமில்லை" "அவனை ஒழிய அமரருமில்லை" "ஒருவனே தேவன்" அவ் வொருவன் சிவனே.]

வன்மை இல்லா வானவரில்
வலியின் மிக்கார் இவர்வலிமை
புன்மை யுற்ருர் இவர்என்று
பொழுது போக்கு வோர்ஆய்க
முன்னம் மலரோன் முதலோர்காண்
முடிபே எமக்கு மயங்காமல்
நன்மை அறிவு தருமாக
நாதா கோதில் பரசிவமே. (46)

உருத்திரனே உயர் பரம்பொருள என்பது
திருத்தகும் அறிஞர் தீர்ப்பெனப் புகன்றது

[பிரமன் முதலிய பேரறிஞர்களே தம் ஆராய்ச்சியிற் கண்ட முடிபாகச் சிவனே பரம்பொருள் எனக் கூறியுள்ளனர். ஏனையோர் கூடிச் சிறு தேவர்களிற் சிறியோர் பெரியோர் இவர் என ஆராய்வதால் யாது பயன்?

"ஈச்சுவர்களில் மேம்பட்டவன் மகேச்சுவரன்; தேவரிற் சிறந்தவன் மகாதேவன்; ஆகிய அவனை யார் அறியவல்லார்? அடைந்தாரது துன்பத்தை அழிக்கும் ருத்திரனே உன் பெருமை வெல்ல முடியாதது" என்பன முதலாக வேதம் சிவன் சிறப்பைக் கூறும்.]

எதுவும் புவன மூன்றுளதென்
இதயம் பொருளா மதியாதால்,
கதுவும் சுகமோ துக்கமோ
கடவ உறுக, கவலேனே:

மதுவும் துகளும் நறுமணமும்
மலர்ந்த கமல மலரினும்ஏர்
பொதுளு முனதா ளிணை அன்பே
பொருந்த வேண்டும் பகவானே. (47)

உன்தாளுக் கன்பன்றி ஒன்றேனும் வேண்டேன்யான்
மன்ருடும் பகவஎன மனக்கருத்தைமொழிந்ததிது.

["அண்டர் வாழ்வும் அமரர் இருக்கையும் கண்டு வீற்றிருக்கும் கருத்து ஒன்றிலேம்'' என்ருர் அப்பர் சுவாமிகளும். "நரகம் புகினும் எள்ளேன் திருவருளாலே இருக்கப் பெறின் இறைவா'' "குற்ருலத் தமர்ந்துறையும் கூத்தா உன் குரைகழற்கே கற்ருவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே'' என்ருர் மணிவாசகப் பெருமான். பகவன் என்ற பெயருக்குரியவன் சிவனே என்று அதர்வ சிகோபநிடதம் ஐயமறக் கூறுகின்றது. மூன்று புவனங்களிலும் உள்ளது எதையும் என் இதயம் மதியாது.]

வயிற்றை நிரப்பல் மாத்திரமே
மன்னும் குறிக்கோள் எனக்கொண்டே
எயிற்றை இளித்துக் கீழோர்முன்
இசைத்த எளிமை தனைக்கொண்டே
பயிற்றுந் துதியாய்ப் பாடியுன
பாத மலருக் கணிந்தேன், என்
வயிற் குற்றத்தை மறுபடியும்
வளர்த்தேன் எந்தாய் மதிசூடீ. (48)

எச்சி லாகிய எளிமைப் பாட்டினை
அச்சோ உனக்கர்ப் பித்தேன் என்றது.

[பொய்ம்மையாளரைப் பாடிப் பொருள் பெற்று மானம் இன்றி வயிறு வளர்த்தல் புன்புலவர் இயல்பு. இறைவனைப் பாடினுல் "இம்மையே தரும் சோறும் கூறையும்—இடர் கெடலும் ஆம்; அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவில்லையே'' (நம்பிகள் தேவாரம்).

முன்னரே இழிந்தோர் பலர்பால் காட்டிய என் ஏழைமையை இன்று உன் பால் துதியாக்கிக் காட்டிய என் திறமையை என்னென்று சொல்வது என்றூர். ஏனையர்பால் மொழிந்த ஏழைமை இகழ்ச்சியும் நரகும் தரும். அதனையே இறைவனிடம் மொழிந்தால் புகழும் சிவலோகமும் தரும்.]

என்றும் சிவமாய் இலங்குகின்ற
எம்மானே என்மன முதல
இன்றுன் பாத தாமரைக்கே இட்டேன்,
இறுகப் பற்றினேன்,
ஒன்று மொழியா தென்குற்றம்
உள்ள எல்லாம் பொறுத்தருளித்
துன்றும் துயரக் கடல்நின்று
தூக்கி என்னைக் காப்பாயே. (49)

தேவ உன் திருவடி சிக்கெனப் பிடித்தேன்
ஆவ என்றருளி ஆட்கொள் என்றடைந்தது.

[என்றும் சிவம்—சதாசிவம். எனதென்பன எல்லாம் உனக்கு ஒப்பித்தேன். உனதின்னருள் வழங்கிப் பிறவித்துயர் தவிர்க்க என வேண்டிக்கொண்டு சிவபாத தாமரையைச் சென்னியிலும் சிந்தையிலும் மலர்வித்துச் சிவானந்த வெள்ளத்தில் திளைப்பார் ஆயினர் ஆசிரியப் பெருந்தகையார்.

இந்த ஆன்மார்ப் பணத்துதிஎன்
இதயம் ஒன்றி, வேறறியாச்
சிந்தையாரச் செய்த தொரு
சிறந்த பனுவல் அன்றெனினும்
வந்த வாறு வாயாலா
வதுநம் சரணம் வரித்தனன் என்
றெந்தாய் கருணை நிதியே கொண்
டென்னைக் காக்க இசைவாயே. (50)

பித்தனேன் மயங்கிப் பிதற்றிய மொழியையும்
அத்தனே துதியாய் அணிந்தருள் என்றது.

[ஒருமையுடன் நினது திருவடிமலர் நினைந்து துதித்தேன் அல்லேன். பித்துக்கொண்ட நிலையிற் பிதற்றினேன். "ஏழை அடியாரவர்கள் யாவை சொன சொல் மகிழும் ஈசனே" (ஆளுடைய பிள்ளையார் தேவாரம்).

நிரேதுக கருணையாளனாகிய நீ இத்துதியையே ஏதுவாகக் கொண்டு எனக்கு அருளுவதில் ஐயமும் இல்லை-தடையுமில்லை என்றார்.

ஆன்மார்ப்பணத் துதி முற்றும்.

திருஞானசம்பந்தன் சேவடி வாழ்க.

முல்லை அச்சகம், 258, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-14.